ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2038
ஆவணி - ஆகஸ்டு 2007

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்





# இந்தியா

## சுதந்திரதின மணிவிழா

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :

website : www.kundrakudiadheenam.org.

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2038 (சர்வசித்து) மாதம் : ஆவணி

மலர் : 21 இதழ் : 8




# திருமுறைகளே நமது மறை!

*"செழுந்தமிழ் வழக்கு அயல்வழக்கின் துறை வெல்ல"*

என்பது சேக்கிழார் வாக்கு!

*"எனதுரை தனதுரையாக"*
என்பது ஞானசம்பந்தப் பெருமானின் - ஞானத் தமிழ்.

*"தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்"*
என்பது நாவுக்கரசரின் நற்றமிழ்!

பண்சுமந்த பாடல்களுக்காய் இறைவனின் பொன்மேனியை மண்சுமக்கச் செய்தது மாணிக்கவாசரின் மணித்தமிழ்!

*"அற்சனை பாட்டே யாகும் ஆதலால் மண்மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடுக"*

என்ற ஆண்டவனின் ஆணையைப் பெற்று பாடியது சுந்தரர் பெருமானின் சுந்தரத் தமிழ்! நற்றமிழ் வல்ல நால்வர் பெருமக்களின் ஞானத்தமிழ் தான் - அயல் வழக்கை வென்ற செழுந்தமிழ் வழக்குத் தான் இன்று வழக்குமன்றத்தில் நீதி கேட்டு நின்று கொண்டிருக்கின்றது! என்னே! நம் தமிழர்களின் சமய வாழ்க்கை! "செவிகாள் கேண்மின்களோ!" என்றார் அப்பர் பெருமான்! அன்றும் தமிழகத்தின் செவிகள் கேட்கமறுத்தன! இன்றும் அதே நிலைப்பாடுதான்!

"நாமார்க்கும் குடி அல்லோம்" என்று முழங்கிய எங்கள் அப்பர் பெருமான் தான் செழுந்தமிழ் வழக்கைக் காக்க உண்ணாநோன்பு

மேற்கொண்ட முதல் அறப்போராட்ட வீரர்! பொன்னையும், மணிகளையும் கூழாங்கற்கற்களாக தூக்கி எறிந்த வீரத்துறவி! தெய்வத் திருமுறைத் தமிழ் வழிபாட்டில் ஏற்பட்ட இடர்ப்பாடு கண்டு மனம் வேதனையுற்ற நிலையில் அருள்நெறித் தொண்டர்கள். சிவனடியார்கள், துறவியர்கள், திருமுறை ஆசிரியர்கள், திருமுறை மன்றங்கள், மகளிர் வழிபாட்டு அமைப்புகள் என்று இரண்டாயிரத்திற்கும் மேற்பட்டோர் தெய்வத்தமிழ் வழிபாட்டுக் கூட்டமைப்பு என்ற அமைப்பின் வழியே கோவை மாநகரில் அப்பர் பெருமான் அடையாளம் காட்டிய உண்ணா நோன்பினை மேற்கொண்டார்கள். பேரூர் அடிகள் பெருமானும் சிரவை ஆதீன குமரகுரபர அடிகள் பெருந்தகையும், பழனி சாது சண்முக அடிகளும், தெய்வத்தமிழ் வழிபாட்டுக்கூட்டமைப்பு தலைவர் இரா.சென்னியப்பனார், பட்டியப்பனார், குமரலிங்கனார் மற்றும் எண்ணற்ற தமிழ்சான்றோர்கள் இடையறாது தெய்வத்திருத்தமிழ்ப் பணி ஆற்றிவருகின்றனர். நாமும், பேரூர் அடிகள் பெருமானும், விழிநீர் சொரிந்த அடியார் திருக்கூட்டத்தின் கண்ணீர் துடைத்து உண்ணா நோன்பினை நிறைவுசெய்தோம்!

"திருமுறைகள் மந்திரங்களா" என்ற கேள்வி எழுந்துள்ளது. "எனதுரை தனதுரையாக" என்று அருளிய ஞானசம்பந்தப் பெருமான் தாம் பாடியவை எல்லாம் இறை அருளால் இறை உணர்வால் அருளப்பட்டவை என்கின்றார். திருஞானசம்பந்தப் பெருமான் தாம் அருளிய பதிகத்தைப் பாடுபவர் பெறும் பயனைப் உறுதியிட்டுக் கூறுவது எதைக் காட்டுகின்றது? திருமருகலில் வாழ வேண்டிய இளைஞன் விடப்பாம்பு தீண்டி மரணித்துக்கிடக்கின்றான்! திருஞானசம்பந்தப் பெருமான் பாடல்தான் அவனை உயிர்ப்பித்துத் தருகின்றது!

*"சடையாய் எனுமால்*
*சரண் நீ எனுமால்"*

-என்ற ஞானசம்பந்தப் பெருமான் பாடலால் விடம் தீண்டிய இளைஞன் உயிர்த்து எழுகின்றான்! திருமறைக்காட்டில், வேதங்கள் அடைத்த கதவை அப்பர் பெருமானின் திருமுறைகள் திறப்பிக்கின்றன. நெருப்பில் எரியாமல், நீரில் மூழ்காமல் எதிர்கொண்டு வென்று நின்றது திருமுறைத் தமிழ்தான்! எலும்புச் சாம்பலை பெண்ணாக்கியது திருமுறைத் தமிழ்தான்! விடம் தீண்டிய அப்பூதி அடிகளின் புதல்வன் மூத்த திருநாவுக்கரசை உயிர்ப்பித்துத் தந்ததும் திருமுறைத் தமிழ்தான்! அவிநாசியில் முதலை உண்ட பாலகனை மீட்டுத் தந்தது திருமுறைத் தமிழ்தான்! ஒப்பாரும்

மிக்காரும் இல்லாத் தலைவன் தாயும் இன்றி, தந்தையும் இன்றித் தனியனாய் இருக்கும் பொழுது அவன் தனிமைத் துன்பத்தைத் தவிர்ப்பது திருமுறைத் தீந்தமிழ் தான்! உலக உயிர்க்குலத்தை ஈடேற்ற இறைவனுக்கு அரும்பெரும் கருவியாகத் தேனாய்த் தீந்தமிழ் திருவாசகம் கிடைத்துள்ளது! இறைவனை - ஒப்பற்ற பரம்பொருளை விண்பிழித்து மண்ணில் கால்பதிக்கச் செய்தது நால்வரின் நற்றமிழ்; மகோன்னதத் துதி. அற்புதங்களை இந்த மண்ணில் நிகழ்த்திய திருமுறைகள் மந்திரத் தன்மை உடையவையா? என்று இன்று கேள்வி எழுப்பப்பட்டுள்ளது. ஒப்பற்ற பரம்பொருளுக்கு - இறைவனுக்கு மணிவாசகரோடு கொண்ட உறவில் யாருக்கு ஆதாயம் என்று, யார் சதுரர் என்று கேட்கின்ற பொழுது, தாம்தான் மணிவாசகரோடு கொண்ட உறவில் ஆதாயம் பெற்றதாகவும், தேனார் தீந்தமிழ்த் திருவாசகமே தம் ஆதாய வரவாகவும் இறைவன் எடுத்துக் கொண்டுள்ளார்! அந்த அருமைத் தமிழ் ஆலயத்திற்கு ஆகாது, ஆண்டவனுக்கு புரியாது என்று சிலர் சொல்லிக்கொண்டிருப்பது விளங்கா விடுகதையாக புரியாத புதிராக இருக்கிறது!

சைவத்தின் மேல் சமயம் வேறில்லை! அந்தச் சைவம் திருமுறைகளின் அடித்தளத்தில் எழுப்பப்பட்டது. மனித வாழ்வின் இன்பத்தில் - துன்பத்தில், சுகத்தில் - துக்கத்தில், வாழ்வில் - தாழ்வில், நன்மையில் - தீமையில் எல்லா நிலைகளிலும் இணைந்தும், பிணைந்தும் வருபவை திருமுறைகளே,

*திருமுறைகளே நமது வாழ்வின் சாரம்!*
*திருமுறைகளே நமது வாழ்வின் சட்டம்!*

நால்வர் பெருமக்கள் ஓதிய திருமுறை மந்திரங்களைத் திக்கெட்டும் முழங்குவோம்! காலம் எழுத இருக்கும் தீர்ப்பினை நம்பிக்கையோடு எதிர்பார்த்து காத்து இருப்போம்! நால்வர் பெருமக்களின் நற்றமிழ்த் தடத்தில் நாளும் பயணம் செய்வோம்!

*மேன்மை கொள் சைவ நீதி*
*விளங்குக உலகம் எல்லாம்!*

*தென்னாடுடைய சிவனே போற்றி!*
*எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!*

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 78. படைச் செருக்கு

படையின் ஆற்றலையும் செயற்பாட்டுத் திறனையும் எடுத்துக் கூறுவது. அதாவது, ஆற்றல் மிக்குடைய படை உடையோம் யாம் என்னும் குணம் ஈண்டுச் செருக்கு என்று கூறப்பட்டது.

*என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ*
*முன்நின்று கல்நின்ற வர்.* (771)

என்னுடைய தலைவனாகிய அரசன் முன்னே நிற்காதீர்! நின்றால், என் அரசன் முன் நின்று நடுகல் ஆனவர் நிலையினை அறிக.

"நடுகல்" வீரர்கள் நினைவுச் சின்னம்.

*கானமுயல் எய்த அம்பினில் யானை*
*பிழைத்தவேல் ஏந்தல் இனிது.* (772)

காட்டினுள் முயலினைக் குறிவைத்து எய்த அம்பைத் தாங்குவதை விட, யானையைக் குறிவைத்துத் தவறிய அம்பைத் தாங்குதல் இனிது.

எல்லாரும் எளிதாக அடையக்கூடிய ஒன்றைக் குறிக்கோளாகக் கொள்ளுதலைவிட உயர்ந்த குறிக்கோளைக் கொள்ளவேண்டும் என்பதை மற்றவர் விரும்பவும் இயலாத யானையைக் குறிவைக்கும் என்பதனால் உணர்த்தியது.

*பேராண்மை என்ப தறுகண்ஒன்று உற்றக்கால்*
*ஊராண்மை மற்றுஅதன் எஃகு* (773)

பகைவர்மேல் தொடுத்த போரைக் கண்ணோட்டமின்றிச் செய்தல் பேராண்மை. அதேபோழ்து அப்பகைவர்க்கு இடர்ப்பாடு வந்தக்கால் அப்பகைவருக்கும் உதவி செய்தல் ஊராண்மையாகும். இந்த "ஊராண்மை" எஃகு போல் வலிவுடையதாகும்.

பகைவர்க்கு உதவி செய்தல் அஞ்சியன்று என்பதனை உணர்த்த "ஊராண்மை"யென்றும் "எஃகு" என்றும் கூறினார்.

*கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்*
*மெய்வேல் பறியா நகும்.* (774)

தான் எறிந்த வேல் களிற்றினைக் குத்தி அவ்வேலைக் களிற்றோடு போக்கி வரும் வீரன் தன் உடம்பில் பாய்ந்துள்ள வேலைப் புன்சிரிப்புடன் பறிப்பான்.

தன் உடம்பில் பதிந்த வேல் தந்த துன்பம் அறியாது, பதிந்த அந்த வேலோடு போர் செய்துள்ளான் என்பதும் "உயர்ந்த வீரத்திற்குத் துன்பமும் சாவும் இல்லை" என்பதும் உணர்த்தியவாறு.

*விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்துஇமைப்பின்*
*ஒட்டன்றோ வன்க ணவர்க்கு.* (775)

பகைவன் வெகுண்டவுடன் பகைவன் மேல் வேலை எறியாமல் கண் இமைத்துப் பார்த்துப் பின் பகைவன்மேல் வேல் எறிதல் புறங்கொடுத்தலுக்கு நேர்.

பொதுவாக, "இமைத்தல்" அச்சத்தின் அடையாளம். ஆதலால் புறங்கொடுத்தலுக்குச் சமம் என்றார்.

"துடிப்புள்ள வீர"த்திற்கு எடுத்துக்காட்டு.

*விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்*
*வைக்கும்தன் நாளை எடுத்து.* (776)

தனது வாழ்நாளில் விழுப்புண்படாது கழிந்த நாள்களைப் பயன்படாத (வாழாத) நாள்களாக வீரர்கள் எண்ணுவர்.

இந்த நூற்றாண்டுக்கு, சாதனை இல்லாத நாள்களும் பயன்படாத நாள்கள் போலவாம்.

வாழ்தல் - பயன்தரத்தக்கவாறு வாழ்தல் என்பதேயாம்.

*சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்*
*சுழல்யாப்புக் காரிகை நீர்த்து.* (777)

இந்த மண்ணில் ஒருவரிடத்தில் நில்லாது சுழன்று கொண்டிருக்கும் தன்மையுள்ள புகழை விரும்பி, துறக்கத்திற்குரிய சாதனைகளைச் செய்யத் தவறும் வீரர்கள் கட்டிய வீரக்கழல் அலங்கார ஆபரணத் தன்மைத்தேயாம்.

"சுழலும் இசை" என்பது இந்த மண்ணில் பெறும் புகழ் நிலையானதல்ல என்று உணர்த்தியது.

*உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்*
*செறினும்சீர் குன்றல் இலர்.* (778)

மரணத்திற்கு அஞ்சிப் போர்க்களத்திற்குச் செல்லத் தயங்காதவர்கள் மறவர்கள். அவர்கள் தம் தலைவன் வெகுண்டாலும் தம் இயல்பில் குறையமாட்டார்கள்.

தலைவனுக்கு வெகுளிவருதலுக்குரிய வாயில்கள் பலப்பல. தலைவன் வெகுண்டான் எனக்கூறித் தம் நிலையில் திரிதல் மறவர்களுக்கு இயல்பன்று.

*இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே*
*பிழைத்தது ஒறுக்கிற் பவர்* (779)

எண்ணிச் சூளுரைத்ததைச் செய்து முடிக்காமல் இறந்துபாடுவோரை யார்தான் ஒறுத்தல் செய்ய இயலும்.

"எண்ணியன முடித்தற்குரியவாறு உடல் உறுதியும் உள்ளத்து உறுதியும் பேணப்படுதல் வேண்டும்" என்பது கருத்து. "எண்ணியது முடிக்க..மல் சாவோர்" கணக்கில் இருப்பவர் அல்..ர். அதனால் ஒறுத்தலும் இல்லை.

"சாவாரை" என்றாலும் எண்ணியவற்றைச் செய்து முடிப்பதில் உள்ள இடர்ப்பாடுகளுக்கு அஞ்சிச் செய்யாமல் விடுவாரைச் "செத்தார்" என்றே கருதுதல் வேண்டும் என்று உணர்த்தியது அறிவு.

*புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு*
*இரந்து கோள் தக்கது உடைத்து.* (780)

தம்மை வளர்த்து ஆளாக்கியவர் கண்ணீர் மல்கி நிற்கும் வண்ணம் அவருக்கு முன்னே அவருக்காகச் சாகும் சாக்காடு இரந்தும் பெறத் தகுதியுடைய சாக்காடு ஆகும்.

தம்மை வளர்த்து ஆளாக்கியவர் கண்ணீர் செத்தாரின் தகுதியை உணர்த்துவது.

தம்மை வளர்த்து ஆளாக்குவோருக்காக உயிர் கொடுத்து அவரைக் (புரவலரை) காப்பாற்றாமல் சாகவிட்டால் இவரைப் பின் யார் புரந்து காப்பாற்றுவார் என்பதுணர்த்திற்று.

*(தொடரும்)*

# தமிழரின் வழிபாட்டு மொழி தமிழே

புலவர். **ச.மு.விமலானந்தன்** க.மு.கல்.இ

ஆகமம் என்பது இறைவழிபாட்டு முறை. ஆகமம் பல வகைப்படும். ஒவ்வொரு இறைவனை வழிபடவும் ஒவ்வொரு ஆகமம் உண்டு. சிவ வழிபாட்டுக்கு உரியது சிவாகமம். தமிழ் மொழியையும் - வடமொழியையும் அருளியதாகக் கூறப்படும் சிவன் சிவாகமத்தை வடமொழியில் மட்டுமா அருளியிருப்பார்? தமிழிலும் அருளியிருப்பார் அல்லவா?

இறைவனுக்கு இசைந்த இன்புறு மொழிகள், இறைவன் விரும்பும் மொழிகள் வட மொழியும், தமிழ் மொழியும் மட்டுமல்ல. உலகிலுள்ள அனைத்து மொழிகளுமே இறைவனுக்கு இசைந்த இன்புறு மொழிகளே. சைவ நீதி உலகெல்லாம் ஓங்கவேண்டுமென்றால், தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் உரியவன் என்றால் அனைத்து மொழிகளும், அனைத்து வழிபாடுகளும் அவருக்கு ஏற்புடையனவே. இறைவனுக்கு அனைத்து மொழிகளும் தெரியும், அவன் அறியாத மொழி ஏதுமில்லை.

எனவேதான் பெரிய புராணம், பரமனையே பாடுவார் புராணத்தில்

*"தென் தமிழும், வடகலையும், தேசிகமும் பேசுவன*
*மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக*
*ஒன்றியமெய் யுணர்வோடும் உள்ளுருகிப் பாடுவார்*
*பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார்"*

(பாடல் எண் 4158).

என்று தெய்வப்புலவர் சேக்கிழார் பாடுகிறார். இந்தப் பாட்டில் "தேசிகமும்" என்பதற்குப் "பிறநாட்டு மொழிகள்" என்று பொருள். மொழி முக்கியமன்று. மூன்றாம் அடியில் வரும் உள்ளம் ஒன்றிய மெய்யுணர்வோடு உள்ளுருகுதல்தான் முக்கியம். அப்படி உள்ளுருகிப் பாடுவது, வழிபடுவது எம்மொழியிலும் இருக்கலாம். பாரதி "முரசு" பாட்டில் பாடியது போல (இந்த நிறம் சிறிது என்றும், இஃது ஏற்றமென்றும் சொல்லலாமோ) இந்த மொழி சிறிதென்றும் இஃது ஏற்றமென்றும் சொல்லலாமோ" (கூடாது).

இறைவனுக்கு வாயால் பேசும் மொழி முக்கியமன்று; பேசுபவர் அகமே (மனமே) முக்கியம். அந்த மனம் கண்ணப்பர் முதலானவரைப்

போன்று தூய அன்பு (பக்தி) உடையதாக இருக்க வேண்டும். அந்த அன்பின் காரணமாக - "எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார் யாவர் அவர் உளந்தான் சுத்த சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடம்" - என்று பாடுகிறார் வள்ளலார். எனவே, உள்ளமே முக்கியம். உரைக்கும் மொழி அன்று.

எந்த மொழியில் வழிபடுவது மரபு? ஆதியில் இருந்தது தமிழ் மொழி வழிபாடே; இடையில் வந்ததுதான் வடமொழி வழிபாடு; குறிப்பாக, பல்லவர்கள், பிற்காலச்சோழர்கள் காலத்தில் வந்த வடமொழி வழிபாடு இன்று வரை வேரூன்றி நிலைத்துவிட்டது. அதனால் வடமொழியில் வழிபடுவதுதான் மரபு எனக்கருதி எழுதும் நிலை ஏற்பட்டுவிட்டது.

எனவே தமிழில் மட்டும் வழிபாடு செய்தால் அது மரபை மீறியது ஆகாது. வடமொழியை எவரும் படிக்கலாம்; ஆனால் அது அனைவருக்கும் தாய் மொழி ஆகாது. அதைத் தாய் மொழியாகக் கொண்டவர்க்கே அது சொத்தாகும். அனைவருக்கும் அவரவர் தாய் மொழியே சொந்தமான சொத்தாகும்.

வடமொழியும் (சமஸ்கிருதமும்), தமிழும் சிவனடியார்களின் தனியுடைமைச் சொத்துகள் அல்ல. சிவனடியார்கள், நாயன்மார்கள் (நால்வர் உட்பட) வடமொழியில் வழிபடவில்லை. தேவாரம் பாடிய மூவர். திருவாசகம் பாடிய மணிவாசகர், மூத்த திருப்பதிகம் பாடிய காரைக்கால் அம்மையார், திருமந்திரம் இயற்றிய திருமூலர் முதலியோர் வடமொழியில் பக்திப் பனுவல் எதையும் எழுதவில்லை.

வடமொழியை அனைத்து சிவ ஆலயங்களிலிருந்தும் விலக்குவது தமிழர் நோக்கம் அன்று. வடமொழியாளர் வாழும் பகுதியில் உள்ள சிவ ஆலயங்களில் வடமொழி வழிபாடுதான் இருக்க வேண்டும். தமிழர் வாழும் பகுதியிலுள்ள சிவ ஆலயங்களில் வட மொழி வழிபாடு தேவையில்லை. இறைவனை வழிபட ஒரு மொழியே போதுமானது. அந்த ஒரு மொழி அவரவர் தாய் மொழியே ஆகும். அந்த வகையில் தமிழகச் சிவ ஆலயங்களில் வழிபாட்டு மொழி தமிழரின் தாய் மொழியாம் தமிழ் ஒன்றே. இது சிவ ஆகமத்துக்கு முரண்பாடானது அன்று. சிவ ஆகமத்தில் வடமொழி தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் வழிபட வேண்டுமென்று சொல்லப்படவில்லை.

“வடமொழியைச் சிவ ஆலயங்களிலிருந்து விலக்கிவிட்டால் நம் சிவபெருமானால் பூலோகத்தில் எங்கு அம்மொழியால் (வடமொழியால்) பூசைகளை ஏற்று மகிழ்வார்?” என்று வினவப்படுகிறது. உலகில் உள்ளோர் அவரவர் தாய்மொழியில் வழிபட்டால் அதைச் சிவபெருமான் ஏற்று மகிழ்வார், எம்மொழியையும் வெறுக்கார்; நாம்தான் மொழி வேறுபாடு கொண்டுள்ளோம். அவருக்கு எம்மொழியும் ஒன்றே (சமமே). எடுத்துக்காட்டாக, ஆங்கிலேயர் சிலர் சிவனிடம் பக்தி கொண்டு, அவனை ஆங்கிலத்தில் வழிபட்டால் அதையும் அவர் ஏற்று மகிழ்வாரேயன்றி, வெறுக்கார்.

வடமொழியாளர் தமிழ் திருமுறைகளைக் கற்றுப் பாடுவதும், தமிழர் வடமொழியில் வழிபடுவதும் அவரவர் தனிப்பட்ட விருப்பத்தைப் பொருத்தது. எந்த மொழியார் மீதும் பிற மொழியை வழிபாடு, கல்வி, ஆட்சி முதலிய காரணங்களைக் காட்டித் திணிப்பது, வலியுறுத்துவது மாபெருந்தவறு. ஆங்கிலேயர் தம் ஆட்சியின் பெயரால் தமிழரை ஆங்கில மொழிக்கு அடிமைப்படுத்தினர். வடமொழியாளர் வழிபாட்டின் பெயரால் தமிழரை வடமொழிக்கு அடிமைப்படுத்தினர். இன்றும் அந்த நிலை நீடிக்கிறது. (இதற்கு எடுத்துக்காட்டே 15.06.2007 அன்று வெள்ளி மணியில் வந்துள்ள “ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயன் அறிவோம்” என்ற கட்டுரை) ஆகமத்தைக் கற்கலாம், அதன் பயனை அறியலாம்; ஆனால் கல்வி, ஆட்சி, வழிபாடு, நீதித்துறை அனைத்தும் அவரவர் தாய் மொழியில் தான் இருக்க வேண்டும். எவரும், எவர் மீதும், எதற்காகவும், எந்த மொழியையும் திணிக்கக் கூடாது.

மேன்மைகொள் சைவ நீதி வையகம் எல்லாம் தழைக்க அவரவர் தாய்மொழியில் வழிபட வழிவிடுவதே சமத்துவ உணர்வாகும்.

தாய் மொழியுடன் வடமொழியிலும் இறைவழிபாடு செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் இறைவன் ஏற்பார் என்பது பொருந்தாத, தவறான கருத்து. அவரவர் தாய்மொழியில் செய்யும் வழிபாட்டையும், குடமுழுக்கையும் இறைவன் ஏற்று அருள் புரிவார்; இதில் எவரும் எள்ளளவும் ஐயம் கொள்ள வேண்டியதில்லை.

தமிழரே சிவனடியார்களைச் சாதி, இன, மொழி, நாடு முதலிய வேறுபாடுகளின் அடிப்படையில் வேறுபடுத்திப் பார்ப்பதும், தூற்றுவதும் இறைவனுக்கு ஏற்பு உடையது அன்று என்ற கருத்து அனைவருக்கும்

ஏற்பு உடையதே. தமிழர் தமிழை வழிபாட்டு மொழியாக ஏற்பது பெரியபுராணம் உணர்த்தும் உண்மையை மீறுவது ஆகாது.

பெரியபுராணம், நாயன்மார் வலியுறுத்தும் வழிபாட்டு மொழி யாது எனப் பார்ப்போம். சுந்தரர் வரலாற்றைப் பார்த்தால் இது நன்கு புரியும். இறைவன் சுந்தரரிடம் "அர்ச்சனை பாட்டேயாகு" என்றார்; அது எந்த மொழிப்பாட்டு என ஐயம் ஏற்படலாம், "சொற்றமிழால் பாடுக" என்று கூறி ஐயத்தைத் தெளிவிக்கிறார். (சுந்தரர் வேற்று மொழியாளராக இருந்தால் அவர் தாய் மொழியில் பாடச் சொல்லி இருப்பார்) சுருக்கமாகச் சொன்னால் அவரவர் தாய் மொழியே வழிபாட்டுக்கு ஏற்றது. அந்த வகையில் தமிழரின் வழிபாட்டுக்குரிய மொழி தமிழ் ஒன்றே, இந்த மரபு இடையில் சிதைந்தது; இன்றும் தொடர்கிறது; இனி, இந்தக் குறையைப் போக்க, தமிழராகிய நாம் தமிழில் வழிபாடு, குடமுழுக்கு முதலியவற்றைச் செய்வோமாக!

இனி வழிபடும் முறையைப் பார்ப்போம். அரசன் ஆகமமுறைப்படி எழுப்பிய கோயிலுக்கு இறைவன் முதலிடம் தராமல், பூசலார் அகத்தில் அன்பினால் கட்டிய கோயிலுக்கு முதலிடம் தந்து அங்கு எழுந்தருளினார். மேலும் ஆகமமுறைப்படி வழிபாடு செய்த சிவகோசரியாருக்குச் சிவன் அருள் செய்யாமல், ஆகம முறைக்கு மாறாக, கண்ணப்பர் உள்ளன்போடு செய்த வழிபாட்டை ஏற்று அவருக்கு ஆறே நாட்களில் அருள் செய்தார். சாக்கிய நாயனார் ஆகமமுறையில் வழிபடாது, கல்லெறிந்து வழிபட்டதை இறைவன் ஏற்று அருள் புரிந்தார். இவற்றால் ஆகமமுறை முக்கியமன்று, எம்முறையாயினும் உண்மையான இறைபக்தியே முக்கியம் என்பதை அறியலாம்.

தமிழ் நூல்களில் தமிழுக்கு இணையாக வடமொழியையும், திருமுறைகளுக்கு இணையாக வேதாகமங்களையும் மதித்துப் போற்றி இருப்பதை போல, வடமொழி நூல்களில் வடமொழிக்கு இணையாக தமிழும், வேதாகமங்களுக்கு இணையாகத் திருமுறைகளும் போற்றப்படவில்லை. வடமொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களிடம் வடமொழியோடு தமிழிலும் வழிபட்டால்தான் இறைவன் ஏற்று அருள்புரிவார் என்று எவரும் சொல்வதில்லை; எழுதுவதில்லை; விழாக்கள் நடத்துவதில்லை என்பதை உணரவேண்டும்.

# அருளாலய ஒத்துழையாமை

(தமிழாகரர். **தெ. முருகசாமி**)

ஒத்துழை யாமை என்னும்
உன்னத கோட்பாட் டைத்தான்
உத்தமர் காந்தி சொல்ல
உயர்ந்தநம் நாட்டை ஆண்ட
வித்தக ஆங்கி லேய
விசித்திர ஆட்சி யாளர்
சித்தமே கலங்கிப் போனார்
செய்வதறி யாமல் தானே!

அதுதானும் ஆங்கி லேய
ஆட்சியைத் தகர்ப்ப தற்குப்
பொதுவான கோட்பா டாகப்
போர்ப்பிர கடனம் போலப்
புதுவிதமாய் மக்கள் கூடிப்
போர்க்குரல் கொடுத்த தாலே
மெதுமெதுவாய் நாட்டை ஆளும்
மேய்ச்சலை விட்டா ரன்றோ!

ஆங்கதுபோல் இந்நாள் தன்னில்
ஆலய வழிபாட் டோடு
வீங்குபுகழ் வீட்டில் செய்யும்
வீறுதமிழ்ச் சடங்கெல் லாமும்
ஓங்குதமிழ் மொழியால் செய்ய
ஓர்கூட்டம் கூடா தென்றே
ஈங்குதடை வாங்கி யுள்ளார்!
ஈசனையும் மறந்தா ராகி!

வந்தமொழி கோயி லுக்குள்
வலம்பெற்று வாழ்க்கை செய்ய
சொந்தமொழி சொத்தை யாகி
சொக்கப்பனை ஆவ தேனோ?
எந்தமொழி வழிபாட் டிற்கே
எந்நாளும் ஏற்ற தென்று
நந்தமிழர் எல்லா ரும்மே
நல்லமுடி வெடுக்கச் செய்யும்;

நற்காலம் வந்து விட்ட
நயப்பினால் ஒன்று செய்வோம்!
சிற்பரன் கோயில் தன்னில்
சிறப்புற நடக்கும் எந்த
அற்புத விழாக்க ளுக்கும்
அனுதினப் பூசை போன்ற
பற்பல வற்றிற் கெல்லாம்
பங்குபெறா திருப்போம் நாமே!

நம்வீட்டில் செய்யும் நம்மின்
நற்சடங்கிற் கெல்லாம் யாரோ
வம்பாள ராக வந்து
வல்வழக்கால் பூட்டுப் போடல்
தெம்பான வழக்க மாமோ?
தெளிந்திட்டோர் ஏற்பா ரோதான்?
கொம்பாக வானை முட்டும்
கொடுஉதியம் உத்திர மாமோ?

எரிவதை இழுத்தால் தானே
எக்கொதிப்பும் அடங்கும் என்று
சரியாகச் சொன்ன முன்னோர்
சத்தியநல் வாக்கைப் போற்றும்
உரிமையைக் கடைப்பி டித்தால்
ஒத்துழை யாமை என்னும்
பெரியதொரு செயலால் விட்டுப்
பெயராதோ அயல்வ ழக்கே!

ஆகமம் தமிழுக் கான
ஆலயச் சொத்து, அந்நாள்
தாகமாய்த் தமிழோ டேதான்
தாவிவட மொழியும் கற்றோர்
மோகத்தால் தமிழின் சொத்தை
மோசம்போய் மொழிபெ யர்த்து
வேகமாய்த் தந்த தாலே
வேதனை இந்நா ளுற்றோம்!

91/1

ஆகம வழிபா டெல்லாம்
அசலாக வடவர்க் குண்டா?
ஆகம முறையில் அங்கே
அருங்கோயில் அமைந்த துண்டா?
ஆகம முறையால் செய்த
அழகுதெய்வச் சிலைதான் உண்டா?
ஆகமத் தாலே ஆன
அச்சாணித் தேரும் உண்டா?

உண்மையில் வாறி ருக்க
உயர்தெய்வத் தமிழ்மந் திரங்கள்
உண்மையாய் தெய்வத் திற்கு
ஒன்றும்புரி யாதென் றேதான்
திண்மையாய் உரைக்கின் றார்கள்
தினம்தினம் தமிழால் வாழும்
எண்ணமிகு தமிழர் என்றால்
இவர்பற்றி என்ன சொல்ல?

இதையெலாம் நினையா ராகி
இன்னுமெந்த நீதி வேண்டி
எதைக்கருதி இங்கே சில்லோர்
எடுக்கின்றார் வாழ்க்கை? அந்தோ!
புதையல்போல் பொக்கி சங்கள்
புகழுடன் இருப்ப தாலே
சதைநகம் போல வாழ்வோர்
சற்றேனும் சிந்திப் பாரா?

இல்லையெனில் ஒத்துழை யாமை
இயக்கத்தைத் தோற்று விக்க
ஒல்லையில் முடிவெ டுப்போம்!
ஒவ்வொரு தமிழர் தானும்
இல்லில்நாம் இருந்த வாறாய்
இறைவனைக் கும்பிட் டேதான்
பல்காலம் கழிப்போம் என்றே
படுத்துறங்கும் வேளை தன்னில்;

சில்லென்ற காற்றைப் போலச்
சிலிர்த்தபடி ஒருவர் வந்து,
"வல்வழக் கிட்டார் போல
வலிந்தேதான் நாமும் செய்தால்
மெல்லவே பகைதான் மூள
மெலிவார்கள் குருக்கள் மார்கள்!
நல்லபடி தொண்டு செய்யும்
நம்மினத்தார் மெலிவா ரன்றோ?

தேள்தானும் கொட்டிற் றென்றால்
திரும்பவே தேளைக் கொட்டல்
நீள்புவியில் வழக்கம் இல்லை!
நினைந்திடும் அதுபோல் நாமும்
கோள்செய்தோர் தம்மைத் தானும்
கேளாக ஆக்கப் பார்ப்போம்!
ஆளாக ஓர்வாய்ப் பைத்தான்
ஆசையால் கொடுத்துப் பார்ப்போம்!

ஆதலால் ஒத்துழை யாமை
உத்தியை ஒத்தி வைத்துப்
பேதமாய் உள்ளா ரோடு
பெரிதாகப் பேசிப் பார்த்தால்
சாதகம் விளைய லாகும்!
சமாதானம் கைகொடுக்கும்!
மோதல்தான் வேண்டாமென்று"
மொழிந்திட்டார்! காணா ரானார்!

உள்ளந்தான் மருகி னாலும்
உத்தமர் சொன்ன அந்தத்
தள்ளரிய வாச கத்தைத்
தனியாக அசைபோட் டேதான்
அள்ளக்குறை வில்லா அந்த
அருளுரை ஆசான் தன்னைத்
தெள்ளுதமிழ் அருளா லயத்தே
தெளிந்திட்டேன் கண்வி ழித்தே!

---

# உயர் குலமும் நாலிரண்டும் - திருத்தம்

(ஆ. சிவலிங்கனார், மயிலை)

*இழுக்குடைய பாட்டிற்கு இசைநன்று; சாலும்*
*ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று; - வழுக்குடைய*
*வீரத்தின் நன்று விடாநோய்; பழிக்கஞ்சாத்*
*தாரத்தின் நன்று தனி.* (நல்வழி - 31)

இந்த நல்வழிப் பாடலில் உள்ள "சாலும் ஒழுக்கம் உயர் குலத்தின் நன்று" என்றிருப்பது "சாலும் ஒழுக்கம் இழிகுலத்தின் நன்று" என்றிருத்தல் வேண்டும். யாராலேயோ திருத்தப்பட்டுவிட்டது என்பது என் கருத்து - ஏன்?

இழுக்குடைய பாட்டு, வழுக்குடைய வீரம், பழிக்கஞ்சாத் தாரம் என்பன வெறுக்கத்தக்கன. அவற்றால் வரும் குறைகளை முறையே இசை, விடா நோய், தனிமை என்பனவற்றால் போக்கிக் கொள்ளலாம். வேண்டாதவற்றை வேண்டியவற்றால் தீர்த்துக் கொள்ளலாம். அப்படியானால் உயர்குலத்தை ஒழுக்கத்தால் போக்கிக் கொள்ளலாமா? உயர் குலம் வேண்டாததா? எனவே ஒழுக்கம் இழி குலத்தின் நன்று? என்ற பாடமே சரியானதாகும். திருநாளைப் போவார், திருப்பாணாழ்வார் வரலாறுகள் சான்றாகும்.

*நிழலருமை வெய்யிலிலே நின்றறி ஈசன்*
*கழலருமை வெவ்வினையிற் காண்மின் - பழகுதமிழ்ச்*
*சொல்லருமை நாலிரண்டில் சோமன் கொடையருமை*
*புல்லரிடத் தேயறிமின் போய்.*

இப்பழம்பாடலில் உள்ள "பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்" என்பது, "பழகுதமிழ்ச் சொல்லருமை ஆரியத்தில்? என்றுதான் இருத்தல் வேண்டும். ஏன்"

நிழல், ஈசன்கழல், சோமன் கொடை என்பன நல்லன. விரும்பத்தக்கன. அவற்றின் அருமையையறிய வேண்டின் வெய்யிலில் நின்றும், கொடிய வினைகளையனுபவித்தும், அற்பரிடம் சென்றலைந்தும்

அறியலாம். விரும்பத்தக்கனவற்றின் அருமையை தக்கனவற்றால் அறியலாம் என்பது பாடலின் பொருள். அப்படியானால் பழகுதமிழ்ச் சொல்லருமையை எதனால் அறியலாம்? நாலிரண்டு என்பதற்கு நாலடியாரும் திருக்குறளும் எனப்பொருள் கொண்டு தமிழ்ச் சொல் அருமையை அவற்றால் அறியலாம் எனப் பொருள் கூறுவர் மடவோர். அவர் கூற்றுப்படி பழகுதமிழ்ச்சொல் விரும்பத்தக்கது என்றும் நால் இரண்டு (நாலடியார் திருக்குறள்) வெறுக்கத்தக்கன என்றும் பொருள்படும். இது நன்றா? விரும்பத்தக்க பழகுதமிழ்ச் சொல்லின் அருமையை வேறொரு மொழியில்தான் காணவேண்டும். அம்மொழி ஆரியமொழி. ஆரிய மொழி பயின்று, அதன் சிறப்பைவிடத் தமிழ்ச் சொல் சிறந்திருப்பதை அறிதல் வேண்டும் என்பதே கருத்தாம். அதனால் "பழ்குதமிழ்ச் சொல்லருமை ஆரியத்தில்" என்ற பாடமே உண்மைப் பாடம் ஆகும்.

---

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

*- ஆசிரியர்*

# சங்க இலக்கிய ஆய்வுமையம்

"குறிஞ்சி" HIG - 17. TNHB, தோப்பூர், மதுரை – 8

## புறநானூறு பன்னாட்டு ஆய்வுக் கருத்தரங்கம்

தமிழ்மொழி, சொம்மொழி என்னும் பெருமையைப் பெறக் காரணமாக விளங்கியவை சங்க இலக்கியங்களே. இன்றைக்குச் செம்மொழியால் இயைந்த சங்க இலக்கியங்களை ஆழ்ந்து அகன்று ஆய்பவர் ஒரு சிலரே. இந்நிலை தொடர்ந்து நீடிப்பின் வருங்கால மாணவர்கள் சங்க இலக்கியம் என்ற பேழையை மறந்து, வெறும் காட்சிப் பொருளாக கேள்விப் பொருளாகக் காணும் நிலை ஏற்படலாம்.

இந்நிலையை மாற்றச் சங்க இலக்கிய ஆய்வு மையம், சங்க இலக்கியங்களின் தனிச்சிறப்பை எடுத்தியம்பும் வகையில் ஒவ்வோர் ஆண்டும் ஓர் இலக்கியத்தைப் பல்வேறு கோணங்களில் ஆய்ந்து கருத்தரங்கம் நடத்தி அனைவரிடமும் விழிப்புணர்வை ஏற்படுத்த முன்வந்துள்ளது.

முன்னதாக, நற்றிணை - பன்னாட்டு ஆய்வுக் கருத்தரங்கை (2005) திருவையாறு அரசர் கல்லூரியிலும், குறுந்தொகை - பன்னாட்டு ஆய்வுக் கருத்தரங்கை (2006) சிவகாசி ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரியிலும் மிகவும் சிறப்பாக நடத்தித் தமிழறிஞர்கள் பலரின் பாராட்டைப் பெற்றுள்ளோம்.

அவ்வழி, இந்த ஆண்டு திசம்பர் மாதம் புறநானூறு - பன்னாட்டு ஆய்வுக் கருத்தரங்கைக் காரைக்குடியில் மிகவும் சிறப்பாக நடத்த உள்ளது.

இக்கருத்தரங்கிற்குப் பல்கலைக்கழக, கல்லூரிப் பேராசிரியர்கள், ஆய்வு மாணவர்கள், இலக்கிய ஆர்வலர்கள் புறநானூறு தொடர்பான ஆய்வுக் கட்டுரைகளை விதிமுறைகளுக்கு உட்பட்டு, ஐந்து பக்க அளவில் தட்டச்சு செய்து,

பேராசிரியர் முனைவர் **இரா. ஜெகதீசன்,**
தமிழ்த்துறைத் தலைவர், அரசு இசைக்கல்லூரி, மதுரை - 625 004

என்ற முகவரிக்கு வரும் ஆகஸ்டு 31க்குள் (31.08.2007) அனுப்பி ஒத்துழைப்பு நல்கும்படி சங்க இலக்கிய ஆய்வு மையம் வேண்டுகின்றது. மேலும், விதிமுறைகளையும் விவரங்களையும் நுண்ணலைபேசி வழி 98421 78721 என்ற எண்ணில் தொடர்பு கொண்டு பெற்றுக்கொள்ளலாம்.

(வைகாசி இதழ்த் தொடர்ச்சி)

# கம்பன் என்றொரு மானிடன்

(தமிழாகரர்.பேராசிரியர். **சாமி. தியாகராசன்**)

**வா**லியின் வரபலத்திற்கு அஞ்சியே மறைந்து நிற்பதைத் தேர்ந்தெடுத்தான் இராமன் என்றால் இராமனது வீரத்தின் மீதும், அவன் வில் மீதும் நமக்கு மரியாதை குறைகிறது. இராமனது மரியாதையைக் குறைத்து, அவனுக்குப் பழி ஏற்படுத்த வேண்டும் என்று கருதியா வான்மீகி சொல்லாத வர பலத்தைக் கம்பன் கொண்டு வந்து புகுத்தியிருப்பான். அப்படியும் எண்ணமுடியாது. வான்மீகி சொல்லாத வரபலத்தைக் கம்பன் கொண்டு வந்ததின் நோக்கம் உயர்ந்ததாகவே இருக்க முடியும். இதில் சந்தேகப்பட்ட முடியாது. அப்படியாயின் வரபல நோக்கம் யாதாக இருக்கும்?

வாலியைக் கொல்ல இராமன் மறைந்து நின்று அம்பு எய்தான் என்ற அடிப்படைக் கதையைக் கம்பனால் மாற்ற முடியாது. நீ ஒரு விலங்கு, விலங்குகளை வேட்டையாடுவது போன்று உன்னை மறைந்து நின்று தாக்கினேன் என்று வான்மீகி சொல்வதைப் போலக் கம்பனால் சொல்ல முடியாது. ஏனெனில் கம்பன் படைத்துக் கொண்டுள்ள இராமன் உயர் பண்புகளின் உறைவிடம். இந்த நூலின் முதல் கட்டுரையில் காணப்படும் சத்துவக்குணம் நிரம்பப்பெற்றவன்.

ஒழுக்கத்தால் உயர்ந்த இராமனை எந்த இடத்திலும் கம்பன் விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. அதே சமயம் சுத்த வீரனாகிய வாலியையும் விட்டுக்கொடுக்க விரும்பவில்லை. வாலியை வலிய போருக்கு அழைத்து, அவன் நேர் செல்வாரின் வரத்திலும் பலத்திலும் பாதி அவனிடத்துத் தானாகவே சென்று சேரும் என்பது நியதி. மானிடனாகிய இராமன் வாலியிடத்துப் போர் செய்ய நேர் சென்றால் அவன் வலியும் வரமும் பாதியாகக் குறையும். பாதி வலி குறைந்த நிலையில் அவன் அம்பின் ஆற்றல் குறையத்தானே செய்யும். முழு ஆற்றலுடன் மறைந்து நின்று இராமன் எய்த அம்பைத் தன் நெஞ்சைத் துளைத்துச் செல்லாமல் வாலி தடுத்து நிறுத்தி, அதனைப் பறித்து எடுத்தான் என்பதை இவ்விடத்தில் நினைவுக்குக் கொள்வது நல்லது. பாதி பலத்துடன் வாலிக்கு முன் நின்று போர் செய்து அதனால் வாலி அழிக்கப்படாமல் போவானேயானால் சுக்கிரீவனுக்கு இராமன் கொடுத்த

வாக்கு நிறைவேறாது. அதன்பின் இராமன் உயிருடன் இருக்க மாட்டான். இது கருதியே அதாவது வாலியின் வரபலத்திற்கு அஞ்சியே இராமன் மறைந்து நிற்க முடிவெடுத்தான் எனக் கருதினால் அதில் ஒரு குறை ஏற்படுகிறது. என்ன குறை அது? ஏற்கெனவே சுட்டிக்காட்டிய இராமனின் வீரத்திற்கும் அவன் வில்லிற்கும் ஏற்படும் இழுக்காகிய குறை அது.

"முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய
பெருந்தவமும் முதல்வன் முன்நாள்
எக்கோடி யாராலும் வெலப்படாய்
எனக்கொடுத்த வரமும்" - பெற்றவன்

இராவணன், எந்தத் திக்கிலிருந்து வந்தாலும், வருகின்ற யாராலும் வெல்லப்படமாட்டாய் என வரம் பெற்றிருந்த இராவணனை அழித்த இராமனுக்கு வாலியை அழிப்பது என்பது முடியாதா என்ன? முடியும். யாராலும் நீ வெல்லப்படமாட்டாய், உன்னை அழிக்க யாராலும் முடியாது என்ற வரம் பெற்றவன் அல்லன் வாலி. முக்கோடி வாழ்நாள் வாழ வரம்பெற்றவனும் அல்லன். முக்கோடி வாழ்நாள் முடிவதற்கு முன்பே, யாராலும் உன்னை வெல்ல முடியாது என்னும் வரத்தை உடைத்து இராமன் இராவணனை அழித்தான் அல்லவா, அதுபோல வாலியின் வரபலத்தை மீறி அவனை அழிக்க முடியும். ஆனால் அதைச் செய்ய அவன் விரும்பவில்லை; ஏன்? தான் பெற்றுள்ள வரத்தின் மூலம் பிறரைத் துன்புறுத்தியவன் அல்லன் வாலி. வரத்தை அவன் தவறான வழியில் பயன்படுத்தினான் என்று ஒரு நிகழ்ச்சியைக்கூட சுக்கிரீவனாலோ அனுமனாலோ சொல்லமுடியவில்லை. இராவணன் முதலிய அரக்கர்களைப் போல என்றோ ஒரு காலத்தில் தவம் செய்து அதனால் பெற்ற வரங்களை முதலாக வைத்துக் கொண்டு பிறர்க்குக் கொடுமை செய்தவனும் அல்லன் அவன். இந்தக் காரணங்களால் வாலி பெற்றுள்ள வரத்திற்கு மதிப்பளிக்க வேண்டும் என்று கருதுகிறான் இராமன். பெற்றுள்ள வரத்திற்கு மதிப்பளிப்பதன் மூலம் அவ்வரத்தைத் தந்த கடவுளுக்கும் மதிப்பளிக்கிறான். இவ்வாறு மதிப்பளிப்பது சுத்த வீரர்களின் சிறந்த குணம் என்பதை அயன் படைக்கு அடங்கிய அனுமன் செயல் கொண்டு அறியலாம்.

"சாய்ந்த மாருதி சதுமுகன் எனும் தன்மை
ஆய்ந்து மற்று இதன் ஆணையை அவமதித்து அகறல்
ஏய்ந்தது அன்று என எண்ணினன்"

என்பது கம்பன் வாக்கு.

சுந்தர காண்டம். பிணிவீட்டுப் படலம்

வாலியின் வரபலம் என்றோ பெற்றது அன்று. நாள்தோறும் சிவபெருமானை வழிபட்டுப் பெறுவது. எட்டு மாதிரத்து இறுதி நாளும் உற்று அட்டமூர்த்தி தாள் பணிவான் என்பது கொண்டு அதனை அறியலாம். இதுவரை சிந்தித்தவற்றைக் கொண்டு நாம் ஒரு முடிவுக்கு வரலாம். வாலியின் வரத்திற்கு அஞ்சாமல், அந்த வரத்திற்கு மதிப்பளிக்கவும் அதன் மூலம் சிவபெருமானுக்கு மதிப்பளிக்கவுமே இராமன் மறைந்து நின்றான் என்பதே அந்த முடிவாகும்.

வாலியின் வரபலத்தைத் தகர்த்து அவனை இராமன் கொன்றான் என்றால் வாலியின் பாத்திரப்படைப்பு முழுமை பெறாது. "வென்றியான வால் செலாத வாய் அலது, இராவணன் கோல் செலாது" என்று அனுமனால் கூற முடியாது. வாலி என்னும் பாத்திரம் முழுமை பெற வேண்டுமானால் இராமன் ஒளிந்தே ஆகவேண்டும்.

வாலியின் வரபலத்திற்குப் பயந்து, இராமன் ஒளிந்து நின்றான் என்றால் இராமன் என்னும் பரிபூரணப் பாத்திரம் ஊனம் உறும். முழுமை பெறாது. இப்பாத்திரம் பரிபூரணமானது, முற்றானது, முழுமையானது என்றால் வாலியின் வரத்திற்கு அஞ்சி அன்று, அந்த வரத்திற்கு மரியாதை தந்து மதிப்பளிக்கவே மறைந்து நின்றான் என்று கொள்வதே பொருத்தமாகும். இவ்வாறு கொண்டால்தான் இராமன், வாலி என்ற இரண்டு பாத்திரங்களின் மாண்பு வெளிப்படும். குறிப்பாக வாலியின் வரத்திற்குப் பயந்தே இராமன் ஒளிந்து நின்றான் என்ற வசைச்சொல் இராமனை விட்டு நீங்கும்.

வரத்திற்கு மதிப்பளிக்கவே மறைந்து நின்றான் என்றாலும், அது போர் அறத்திற்கு மாறானதே என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. இது பற்றியே கம்பன், அம்பு பட்டுக்கிடக்கும் வாலியின் முன்பு அவன் காணுமாறு அங்கதனிடம் இராமன் தன் உடைவாளைத் தந்து நீ இது பொறுத்தி எனக் கூறும் படியும்; சுக்கிரீவனிடம் வில்லறம் துறந்து வாழ்கிறேன் என இராமனைச் சொல்லும் படியும் செய்து, பிழை உடன் படல் என்ற பெருங்குணத்தால் தான் செய்த தவறுகளுக்குப் பிராயச்சித்தம் தேடிக்கொள்கின்றான் என்கிறான்.

வான்மீகிகத்தில் சொல்லப்படாத வரவத்தைக் கொண்டு வந்ததன் மூலம் இராமன், வாலி என்னும் இரண்டு பாத்திரங்களின் குணச் சிறப்பைப் பளிச்சிட செய்து அவர்களது புகழ்க் கொடியை உயர்த்திப் பிடிக்கின்றான் கம்பன் எனக் கூறின் அது தவறாகாது.

(நிறைவு)

# டெல்லி தமிழ்ச் சங்கம்

இந்தியாவின் தலைநகர் (புது)டெல்லி சிறப்பானது என்பது அனைவரும் அறிந்ததே. டெல்லி மாநகரில் இந்தியாவின் அனைத்து மாநிலங்களின் நிர்வாகம், பண்டைய நாகரீகம் மொழிவாரியான வளர் நிறுவனங்கள் பல உள்ளன.

டெல்லி தமிழ்ச்சங்கம் 60 ஆண்டு நிறைவு மணிவிழாக் கண்ட மாபெரும் தமிழ் மொழி தமிழ்க் கலாச்சாரம் பரப்பும் சக்தியாக உள்ளது. டெல்லி தமிழ்ச் சங்கத்தை சிறு வாடகைக் கட்டிடத்தில் தொடங்கி ஆலவிருட்சம் போல் வளர்ந்து சொந்தக் கட்டிடம் கண்டு முத்தமிழ் வளர்ச்சிக்கும் மையமாக விளங்குமாறு இன்றுவரை நிர்வகித்து வரும் ஆன்றோர், சான்றோர், ஆர்வலர் அனைவரும் மதிப்புடையவர்கள்; பாராட்டுக்குரியவர்கள்.

டில்லி தமிழ்ச்சங்கத்தின் நிகழ்ச்சிகளில் நமது முந்தைய குருமகா சந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் பலமுறை கலந்து கொண்டுள்ளார்கள்.

இவ்வாண்டு சிறப்பு இலக்கிய விழாவில் கலந்து கொள்ள நமது மகாசந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களை அழைத்தார்கள். பல்வேறு பணிகளுக்கிடையேயும் நேரம் ஒதுக்கிக் கொடுக்குமாறு பணித்தார்கள்.

22.07.2007 ஞாயிற்றுக்கிழமை மாலை 7.30 மணியளவில் டெல்லி தமிழ்ச் சங்கத்தில் "திருக்குறள் நெறி" என்பது பற்றிய சிறப்பு இலக்கியச் சொற்பொழிவாக மகாசந்நிதானம் அவர்கள் சுமார் 1½ மணி நேரம் பேசினார்கள்.

டெல்லி தமிழ்ச் சங்கத்திற்கு முதன் முறையாகச் சென்றதும் அங்குள்ள தமிழர்களிடம் பேசிய தமிழ்ப் பேச்சும் மிகவும் சிறப்பாக அமைந்திருந்தது. அனைவரும் பாராட்டினார்கள்.

டில்லி தமிழ்ச் சங்கத்தில் அமைந்துள்ள பிரமாண்டமான திருவள்ளுவர் கலையரங்கில் இறைவணக்கத்துடன் நிகழ்ச்சி தொடங்கியது. விழாத்தலைவராக தமிழ்ச் சங்கத் தலைவரும் மூத்த வழக்கறிஞருமான திருமிகு. எம்.என். கிருஷ்ணமணி அவர்கள் அமர்ந்திருந்து சிறப்பித்தார்கள். தலைவரின் தலைமை அனைவருக்கும் மகிழ்வைத் தந்திருந்தது.

டில்லி தமிழ்ச் சங்க செயலர் திருமிகு. இரா. முகுந்தன் அவர்கள் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் செய்து வரும் சேவைகளைப் பாராட்டி வரவேற்புரையாற்றினார்கள்.

திருமிகு. கே.வி.கே. பெருமாள் அவர்கள் டில்லி தமிழ்ச் சங்கத்தின் நிகழ்ச்சிகள் அமைப்பாளர். இந்திய நிதியமைச்சரின் தனிச் செயலர். தொகுப்புரையில் "தவமே தவமிருந்து தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களை தமிழ்ச் சங்க நிகழ்ச்சியில் கலந்து கொள்ளச் செய்துள்ளது" என்று தொடங்கியவுரை அனைவரின் பாராட்டுதலையும் பெற்றது.

இந்தியத் தேர்தல் ஆணையத்தின் துணை ஆணையர் திருமிகு. ஆர். பாலகிருஷ்ணன் அவர்கள் தமது சிறப்புரையில் கன்யாகுமரியில் நடைபெற்ற மதக்கலவரத்தின்போது ஆதீனம் செய்த சமாதானப் பணிகளையும், அண்மையில் நாகையில் ஏற்பட்ட சுனாமிப் பேரழிவில் ஆதீனம் செய்த நிவாரணப்பணியையும் குறிப்பிட்டுச் சிறப்புரையாற்றினார்கள்.

டில்லி தமிழ்ச் சங்கத்தின் துணைத் தலைவர் திருமிகு. எஸ்.துரை அவர்கள் நயமாக நன்றியுரையாற்றினார்கள். விழா இனிதே நிறைவுற்றது.

கடமை என்பது மனித வாழ்வின் குறிக்கோள். கடமையைக் கடமைக்காகவும், நன்மையை அது நன்மை என்பதற்காகவுமே செய்ய வேண்டும். கடமையைச் செய்வதில் எதிரொலியான விளைவுகள் - பலாபலன்கள் பற்றி எண்ணினால் கடமையாற்றலின் தரமும் தகுதியும் குறையும். மேலும் கடமையின் நிழலாகத் தன்னலம் தோன்றி வளர்ந்து, பின் கடமையுணர்வையும் மறைத்து அழித்து ஆதிக்கம் செலுத்தும்.

**- அருள்நெறித்தந்தை**

# பொய்

(கவிவேந்தர். **கா. வேழவேந்தன்**)

"பொய்" என்னும் நாநஞ்சே இலையேல், மண்ணில்
பூசலுண்டா? வழக்குண்டா? களரி உண்டா?
பொய்தானே கயமைக்குத் தாய்ப்பால்! பேசும்
பொய்தானே நேர்மையினைப் பொசுக்கும் கொள்ளி!
பொய்ம்மைக்கோ ஆயுள்மிகக் கொஞ்சம்; ஆனால்
பூகம்ப அழிவுகளை விளைக்கும்! சொன்னால்
பொய்தானே அற்பர்முக மூடி; பொய்யர்
போடுகின்ற நாடகத்தால் சாகும் நீதி!

காதலியைக் கவிழ்ப்பதற்குப் பொய்ம்மை என்னும்
கைச்சரக்கைக் காதலரும் விரிப்ப துண்டு!
மாதுளைபோல் தித்திக்கும் கவிதைக் குள்ளே
—னைப்போடு பொய்யிழைக்கும் கவிஞர் உண்டு!
"சீதளத்து நிலாதருவேன்" என்னும் பொய்யால்
சிறாருக்கே உணவூட்டும் தாய்மார் உண்டு!
ஆதலினால் பாதகத்தை விளைவிக் காத
அழகான நலப்பொய்கள் நடமா டட்டும்!

மெய்யுலகம் தழைப்பதற்கே உழைத்த "காந்தி"
மேதினியில் புகழ்வானின் முகடு சென்றார்!
பொய்யுலகைப் படைப்பதற்கே "கோய பல்"சோ
பொழுதெல்லாம் பாடுபட்டான்; அழிந்தே போனான்!
பொய்வாக்கைத் தந்துவிட்டு மக்கள் வாக்கைப்
போய்ப்பறித்த கசடர்களோ புழுதி யானார்!
பொய்யில்லா மெய்வாழ்வே மேன்மை சேர்க்கும்;
பொய்ப்பூவாம் "காகிதப்பூ" முடியா சேரும்?



# தரம்பற்றித் தரப்பெற்றவர்

(தமிழாகரர்.முனைவர். பா. சுந்தர்)

தவத்திரு குன்றக்குடி அடிகளார் எனப்போற்றப்பட்ட அடிகள் வழக்கம்போல் தேவகோட்டை கந்தர்சஷ்டி விழாவிற்கு அழைக்கப்பட்டிருந்தார். அதன்படி ஓராண்டு, கலந்து கொண்டு, நிகழ்ச்சி முடிந்து திருமடம் திரும்பினார். அன்று இரவு நேரமாகியிருந்தது. அடிகள் ஓய்விற்குச் செல்லும் நேரத்தில் நள்ளிரவு நெருங்கியது. அப்பொழுது அணுக்கத்தொண்டர் அண்ணாமலை அடிகளிடம் ஒரு தகவலை விண்ணப்பித்தார். அதுகேட்ட அடிகள் கீழே விரைந்தார். திருமடத்து முகப்பில் ஒரு வாடகை மகிழுந்து நிறுத்தப்பட்டிருந்தது. அதன் பின் இருக்கையில் ஒரு மூதாட்டி படுக்கவைக்கப்பட்டிருந்தார்..அவர் தளர்ந்து சோர்வுடன் காணப்பட்டார். அடிகள் அவரைக் கண்டார். அம்மூதாட்டியும் அடிகளைக் கண்டார். அப்பெருமாட்டியின் கண்கள் குளமாயிற்று. சிறிது மௌனம் நிலவியது. ஒரு குவளையில் தண்ணீர் அடிகளிடம் தரப்பட்டது. அடிகள் அதைப் பெற்று அம்மூதாட்டிக்குப் புகட்டுமாறு செய்தார். பின்னர், வண்டி புறப்பட்டது. சில நாட்களில் அவரும் காலமானார். அது அடிகளுக்குத் தெரிவிக்கப்பட்டது. கேட்ட அடிகளார் சிறிது நேரம் அமைதி காத்தார். அச்செய்தி திருமடத்து அன்பர்களுக்குத் துயரச் செய்தியாயிற்று. ஆயினும், அடிகள் கலங்காமல் தம் பணியைத் தொடர்ந்தார். ஆம் அம்மூதாட்டி வேறு யாருமில்லை, நமது அடிகளின் பூர்வாசிரமத் தர்யார் திருமதி. சொர்ணத்தம்மாள் ஆவார். தாயாரின் மறைவால் அடிகள் தமது பணிகளை ஒதுக்கவும் இல்லை, ஒத்தி வைக்கவுமில்லை, மாறாக திட்டமிட்டவாறே தொடர்ந்தார்.

ஆனித் திங்கள், பூரட்டாதித் திருநாள் நம் அடிகளின் நாண்மங்கலம் ஆகும். அதையொட்டி ஒரு கலந்துரையாடல் திருமடத்தில் நிகழும். இதுவும் வாய்ப்பு வழி அமையும். ஒத்துணர்வு உடையவர்களும், கருத்து ஒத்த சுற்றத்தினரும் அழைக்கப்பட்டு அவர்களோடு அடிகள் கலந்துரையாடுவார். இதன்வழி கருத்துப் பரிமாற்றம் நிகழும். முடிவில், அன்பர்களோடு உணவு அருந்துவார். இப்படி ஓராண்டு நடந்தது. அந்த ஆண்டு திருமடத்துத் தொண்டர் ஒருவரால் ஒரு வினா விடுக்கப்பட்டது. அது மிகவும் எச்சரிக்கையோடும்,

மிகுந்த மரியாதையோடும் பரிவுடன் வினவப்பட்டது. அடிகள், அந்த நேரத்தில் அந்த வினாவை எதிர்பார்க்கவில்லை என்பது அவரது திருமுகக்குறிப்புவழி தெரிந்தது. எனினும், அமைதியுடன் முறுவலித்தவாறே செவிமடுத்தார், விடை ஏதும் பகரவில்லை.

சில ஆண்டுகள் நகர்ந்தன. 1993-ஆம் ஆண்டு திருக்குறள் பேரவை சார்பில் திருமடத்து அன்பர்கள் குன்றக்குடிக்கு அழைக்கப்பட்டு இருந்தனர். ஏராளமானவர்கள் கூடினர். ஆதீன கொலுமண்டபத்தில் ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கூட்டத்தினிடையில் ஓர் இளைஞர் அழைத்து வரப்பட்டார். அவர் திருமடத்து மரபுப்படி "அடிகளது சீடர்" என அறிவிக்கப்பட்டார். அதுவும் அவ்விளைஞரது முழுச் சம்மதம் பெற்ற பிறகே நடந்தது.

சில நாட்களில் அவருக்குத் துவராடை தரப்பட்டு முறைப்படி திருமடத்து இளவரசாக (சின்ன பட்டம்) நியமிக்கப்பட்டார். முன்னர் கலந்துரையாடல் நிகழ்ச்சியில் அடிகளிடம் விடுக்கப்பட்ட வினாவிற்கு விடை அன்று கிடைத்தது. ஆம் திருமடத்து வாரிசு யார்? அடிகளது பணிகளைத் தொடரப் போவது யார்? என்பதே வினாவாகும். ஓசையின்றி அடிகள் இச்செயலை நிறைவேற்றியதை அறிந்து அனைவரும் வியந்தனர்.

அந்த இளம் துறவியின் குடும்பத்தைச் சார்ந்த பெண்கள் குறிப்பாக அவரது தாயார் தங்கள் வீட்டுப்பிள்ளை "துறவறம்" ஏற்றதறிந்து பதறினர். தாய் மகனைக் காவியுடையில் கண்டதும் அழுதார். துறவறம் விடுத்து இல்லறம் திரும்புமாறு மன்றாடினார். ஆனால், இளம் துறவி உறுதியுடன் இருந்தார். தாயாரைத் தேற்றினார். அந்தத் தாய் மீண்டும் தன் மகன் வீடு திரும்புவான் என்னும் நினைப்பில் ஊர் சேர்ந்தார்.

இந்நிலையில், 1995-ஆம் ஆண்டு அடிகள் சிவசாயுச்சிவம் எய்தினார். அதுவரை இளவரசராக இருந்த இளந்துறவி "பொன்னம்பல அடிகளார்" என்னும் திருப்பெயரில் திருமடத்தின் 46ஆவது குருமகாசந்நிதானமாகப் பொறுப்பேற்றார்.

குன்றக்குடி ஆதீனம் உலகமறிந்த சமய நிறுவனம் - ஆதீன நிர்வாகம் - அதற்கு உட்பட்ட ஐந்து கோயில்களின் பொறுப்புகள் - அடிகளால் தொடங்கப்பட்டிருந்த அருள்நெறித் திருக்கூட்டப்பணிகள் - திருக்குறள் பேரவை, திருவருள் பேரவை முதலான இயக்கப் பணிகள் - அடிகளால் ஏற்படுத்தப்பட்டிருந்த திட்டக்குழுப்பணிகள் - அறிக அறிவியல் - மக்கள் சிந்தனை - இதழ்ப் பணிகள் - சுதேசி விஞ்ஞானக் கழகத்தின் அறிவியல் பரப்பும் பணிகள் - இவற்றுக்கிடையே சமய, சமுதாயப் பணிக்களங்கள் - இலக்கிய விழாக்கள் ......... இவை போன்ற பொறுப்புக்களை பொன்னம்பல அடிகளார் ஏற்க வேண்டிய சூழல். இவை அனைத்தையும்விட எல்லா நிலைகளிலும் அடிகளோடு ஒப்பிட்டுப்பார்க்கும் அன்பர்களின் மனநிலையும், எதிர்பார்ப்பும். திருவருள் துணையால் பொன்னம்பல அடிகளார் இவற்றை எதிர்கொண்டார். "குன்றக்குடி அடிகளே" என்று போற்றப்படும் அளவிற்குப் பொன்னம்பல அடிகளாரின் தொண்டுகள் தொடர்கின்றன.

சுதேசி விஞ்ஞானக் கழகத்தின்வழி நினைவில் வாழும் அடிகள் அறிவியல் கண்காட்சிகள் நடத்தி அறிவியலைப் பரப்பினார். அதன்படி வள்ளல்பாரி மேனிலைப்பள்ளியில் கண்காட்சி நடத்தத் திட்டமிடப் பட்டிருந்தது. பள்ளியில் போதிய கட்டிட வசதியின்மையைக் காரணம் காட்டி கண்காட்சி வேறு பள்ளிக்கு மாற்றப்பட்டது. அடிகளின் இறுதிக் காலத்தில் இது நடந்தது. அடிகளும் மறைந்தார். கண்காட்சியும் நடத்தப்பட்டது. கண்காட்சி நிறைவுநாள் விழாவில் பொன்னம்பல அடிகளார் நமது குருமகா சந்நிதானத்தின் நினைவுகளோடு கலந்து கொண்டார். விழாவில் வள்ளல்பாரி மேனிலைப்பள்ளியில் கட்டிட வசதியின்மை குறித்துப் பேசப்பட்டது. இதை பொன்னம்பல அடிகளார் அமைதியாகச் செவிமடுத்தார். அமைதி வைராக்கியமாக மாறியது. வைராக்கியம்வழி செயலாக்கம் பிறந்தது. புதிய கட்டிடத் திறப்பு விழாவிற்கு நாளும் குறித்தாயிற்று. கல்விவிழாவாக மக்கள் விழாவாகத் திட்டமிடப்பட்டது. அனைவரும் ஆவலுடன் எதிர்நோக்கினர். விழாநாளும் வந்தது. அன்று அதிகாலைப் பொழுதில் திருமடத்துத் தொலைபேசி ஒலித்தது. அந்த நேரத்தில் தொலைபேசி வழி அடிகளாரை அழைப்பது அபூர்வம். அடிகளார் ஒலி வாங்கியை எடுத்தார். மறுமுனையிலிருந்து வந்த ஒரு தகவலை அடிகளார் கேட்க நேர்ந்தது. கேட்டதும் "அப்படியா!" என்றார்; அமைதியானார். ஆம்.

அடிகளாரின் பூர்வாசிரமத் தாயார் இயற்கை எய்தியிருந்தார். தன்மகனின் நினைவுகளோடு அதுவரை உயிர் தாங்கி இருந்த திருத்தாயார் தன்மகனைக் காணாமலேயே விண்ணுலகம் எய்தினார். அன்று மாலையில் பிரான்மலைப்பள்ளியின் புதிய கட்டிடத் திறப்பு விழா! அடிகளார் திட்டமிட்டவாறே விழாவில் கலந்து கொண்டார். அவ்விழா, கட்டிட வசதியின்மையால் அறிவியல் கண்காட்சி மாற்றப்பட்டதற்கும், அதுபற்றி பேசப்பட்டதற்கும் விடைகூறும் விழாவாக அமைந்திருந்தது. அதே நாள், அதே வேளையில் அடிகளாரைப் பெற்றெடுத்த தாயாரின் இறுதி ஊர்வலமும் புறப்பட்டது.

தமது குருநாதர் குன்றக்குடி அடிகள் அமைத்த பாதையில் பொன்னம்பல அடிகளாரின் பயணம் தொடர்கின்றது. நமது நினைவில் வாழும் குருமகாசந்நிதானம் திருமடத்து வாரிசைத் தரம் பற்றித் தந்துள்ளார் என்பதற்கு இதுவும் ஒரு சாட்சியாகும். "குன்றக்குடி அடிகளார் பணிகள்" என்னும் தலைப்பில் நான் எழுதிய நூலை இவருக்குக் காணிக்கை செய்யும் விதத்தில் ஒரு பாடலை எழுதியிருந்தேன்.

*வரம்பற்றி வந்த வள்ளல் தெய்வ சிகாமணி வழியில்*
*தரம்பற்றித் தந்தார் நமதடிகள் பொன்னம் பலமுனிவ நின்னை*
*உரம்பற்றி உத்தமத் தலைவரின் தோழமை நெறியில் எம்தம்*
*கரம்பற்றிக் கூட்டிச் செல்லும் கனகமணிக் குன்றே காணிக்கை!*

இப்பாடலின் "இரண்டாவது தொடரே" எனது நினைவுக்கு வந்தது.

(மக்கள் சிந்தனை திருவள்ளுவராண்டு 2038 வைகாசி - மே - 2007) இதழில் நமது அடிகளார் பெருந்தகை தீட்டியிருந்த நெஞ்சில் நிற்கும் நினைவுகள் படித்த பின்னர் ஏற்பட்ட நினைவலைகள்)

அன்பர்கள் அனைவருக்கும்

**இந்திய சுதந்திரதின அறுபதாம் ஆண்டு நிறைவு விழா**

வாழ்த்துக்களை "மக்கள் சிந்தனை"

அன்புடன் தெரிவித்துக் கொள்கிறது.

-ஆசிரியர்

# விடைபெற்றார்
# மனம் கவர்ந்த மக்கள் ஜனாதிபதி!



ஜனாதிபதிகள் ராஷ்டிரபதி பவனை விட்டுக் கிளம்பி செல்லும் போது, லாரி லாரியாக பொருட்களை ஏற்றிச் செல்வது உண்டு. கலாமுக்கு லாரிகள் தேவைப்படவில்லை. இரண்டு சூட்கேஸ்களுடன் அவர் புறப்பட்டுச் சென்றுவிட்டார்.

ஜனாதிபதியாக இருந்த வி.வி.கிரி. மாளிகையை விட்டு கிளம்பிய போது, அவருடைய பொருட்கள் ஏற்றிய லாரியில், ஜனாதிபதி அமர்வதற்குரிய அசோக சின்னம் பொருத்தப்பட்ட விலை உயர்ந்த நாற்காலியும் ஏற்றப்பட்டது. பின்னர், அது பாதுகாவலர்களால் அடையாளம் காணப்பட்டு திரும்ப ராஷ்டிரபதி பவனில் வைக்கப்பட்டது.

அதே போல் பரிசுப் பொருட்களை பலர் தங்களுடன் கொண்டு சென்றிருக்கிறார்கள். அப்துல்கலாம் தனக்கு வழங்கப்பட்ட பரிசுப் பொருட்களை அங்கேயே விட்டு வந்துவிட்டார். கலாமின் குடும்பத்தினர் டில்லி சுற்றுப்பயணம் சென்ற போது, ராஷ்டிரபதி பவனை சேர்ந்த ஒரு வாகனம் கூட பயன்படுத்தப்பட வில்லை. அவர்கள் ராஷ்டிரபதி பவனில் சாப்பிட்ட உணவுக்கு கூட அவரே பாக்கெட்டிலிருந்து பணம் கொடுத்தவர்.

இனி ஒரு ஜனாதிபதி இவரைப் போல் அங்கு இருக்க முடியுமா என்று தெரியவில்லை. அந்த அளவுக்கு எளிமையாக இருக்க முயற்சியாவது செய்ய முடியுமா என்று தெரியவில்லை.

கலாம் ஜனாதிபதி மாளிகைக்கு வந்தபோது, எடுத்து வந்ததைவிட, அவர் திரும்பிச் செல்லும் போது கொண்டு செல்வது குறைவு. அவர் விலை கொடுத்து வாங்கிய புத்தகங்களைத்தான் அவர் உடன் எடுத்துச் சென்றிருக்கிறார்.

(தினமலர் - மதுரை - 25.7.2007)

“தமிழ்ப்பாவை” ஆசிரியர்

**கருணைதாசன்** மறைவு

தமிழ்நெறிக் காவலர் என்று போற்றப்பட்ட மதுரை “தமிழ்ப்பாவை” ஆசிரியர். திரு. **அ. கருணைதாசன்** அவர்கள் 21.7.2007 இல் மறைந்தார். இப்பெருமகனார் அருள்நெறித்தந்தை அவர்கள் தோற்றுவித்த திருக்குறள் பேரவை, திருவருட்பேரவை ஆகிய இயக்கங்களில் ஈடுபட்டு. தமிழ்ப்பண்பாட்டு வளர்ச்சிக்கும், சாதி மத நல்லிணக்கத்திற்கும் சிறப்பாகத் தொண்டாற்றியவர். “தமிழ்ப்பாவை” இதழின் ஆசிரியராக இருந்து இவராற்றிய தமிழ்ப்பணி பாராட்டுக்குரியது. இப்பெருமகனாரின் மறைவு தமிழுக்கும், தமிழ்ச் சமுதாயத்திற்கும் பேரிழப்பாகும். இவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் “மக்கள் சிந்தனை” ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்திக் கொள்வதோடு அவர்தம் நல்லுயிர் இன்ப அமைதி பெற திருவருளை இறைஞ்சுகிறது.

**- ஆசிரியர்**



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

**குன்றக்குடி - 630 206**

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின் அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயிறுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முன்னவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

உ



குன்றக்குடி

திருவண்ணாமலை ஆதீனம்

# குருபூசை விழா

| | | |
|---|---|---|
| நாள் | : | **30.8.2007** வியாழக்கிழமை |
| காலை மணி 10-30 | : | நூல் வெளியீட்டு விழா - சிறப்புச் சொற்பொழிவு |
| வெளியிடப்பெறும் நூல் | : | டாக்டர். மு. நளினி,<br>டாக்டர் இரா. கலைக்கோவன்<br>இருவரும் இணைந்து எழுதிய<br>"தென்தமிழ்நாட்டுக் குடைவரைகள்" தொகுதி - 1 |
| நூல் திறனாய்வுரை | : | திரு. முனைவர். ம. இராசேந்திரன்<br>(தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர்) |
| சிறப்புச் சொற்பொழிவு | : | டாக்டர். இரா. கலைக்கோவன் |
| மாலை 2.30 மணி | : | திருமுறை இசையரங்கு<br>கயிலை சோமசுந்தரம் ஓதுவார் குழுவினர், மதுரை. |
| மாலை 4.00 மணி | : | பாராட்டுவிழா<br>திருவருள்திரு **குருமகாசந்நிதானம்** அவர்கள்<br>திரு. **எஸ். சின்னப்பா** அவர்களுக்கு |

***"அறமனச் செம்மல்"*** என்னும் பட்டம் வழங்குதல்

| | | |
|---|---|---|
| பாராட்டுரை | : | திரு. முனைவர். **பீ. இராமசாமி**<br>(துணைவேந்தர், அழகப்பா பல்கலைக்கழகம்) |
| இரவு 7.00 மணி | : | திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் கொலுவீற்றருளல். |

***அனைவரும் வருக! குருவருள் பெறுக!***

- திருவண்ணாமலை ஆதீனம்

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - August 2007 Price Rs. 5-00
Date of Publication 20-08-2007
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு [illegible] அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166